2nd April 1958]

* 517 *Q.*—SRI A. V. P. ASAITHAMBI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the expenditure incurred on the Police Forces of other States used in the Madras City from 3rd to 7th January 1958; and

(*b*) the batta per day paid to them?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Full details of the expenditure are not yet available. It has to be worked out in consultation with the Government of Andhra Pradesh in due course.

(*b*) No batta was paid by this Government to the Police Forces of other States which did bandobust duty in the City during the period 3rd to 7th January 1958.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know from the Hon. Minister for Home whether the Government paid the Andhra Police their salary also during their stay at Madras or paid only their Travelling Allowance and Daily Allowance?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சம்பளம், அலவன்ஸ், சாப்பாடுபோட வேண்டியிருந்தால் சாப்பாடு எல்லாம் சேர்ந்துதான்.

SRI K. ANBAZHAGAN : இந்த குறிப்பிட்ட நான்கு நாட்களில் இங்கு தங்கியிருந்த ஆந்திர போலீஸ்காரர்களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு ? அப்படி தங்கியிருந்தவர்கள் இங்கே மக்களிடையே மாறுபட்ட சூழ்நிலை, மனப்பான்மை வளர்வதற்கு காரணமாக இருந்தார்கள் என்பது மந்திரி அவர்களுக்கு தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறு ஒன்றுமில்லை என்று நான் உறுதியாகச் சொல்ல முடியும். அவர்கள் எத்தனை பேர்கள் என்ற எண்ணிக்கை என்னிடத்தில் இல்லை.

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் கேட்ட இரண்டாவது கேள்வி நல்ல கேள்வி அல்ல. கேள்வி நேரத்தின்போது அபிப்பிராயத்தைச் சொல்லக்கூடாது. ஆங்கிலத்தில் இன்ஸினுவேஷன் என்று சொல்லும் முறையில் ஒன்றும் சொல்லக்கூடாது. தயவு செய்து இம் மாதிரிக் கேள்விகளை இனிமேல் கேட்க வேண்டாம்.

SRI A. V. P. ASAITHAMBI : பண்டித நேரு அவர்கள் சென்னை வந்த சமயத்தில் ஆந்திர போலீஸ் இங்கு இருந்ததாக அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். காரணமின்றி அவர்களை இங்கே வைத்துக்கொண்டிருந்ததின் அவசியம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ராமனாதபுரத்திலிருந்து அவர்கள் வழி அனுப்பப்பட்டார்கள். அவர்கள் சென்னை வழியாகத்தான் போகவேண்டும். அவர்கள் அப்பொழுது சென்னையில் இருந்ததால் அவர்கள் பயன்படுத்திக்கொள்ளப்பட்டார்கள்.

*Co-operative Weavers' Colony*

* 518 *Q.*—SRI M. D. RAMASWAMY : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the acquisition proceedings in respect of the Co-operative Weavers' Colony, Aruppukkottai, are held up; and

(*b*) if so, the reasons therefor?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) & (b) Yes, Sir. The owner of one of the sites proposed to be acquired raised certain objections. These objections have been considered and orders have since been passed. The acquisition will now be proceeded with.

*Director of Agriculture*

* 519 Q.—SRI V. SUBBIAH : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether the Government have considered at any time the question of appointing a specialist in agriculture as to the Director of Agriculture; and

(b) if so, the decision taken on the matter?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Yes.

(b) The Government have decided that the post of Director of Agriculture, Madras, should be held by an officer belonging to the Indian Administrative Service.

SRI V. SUBBIAH : விவசாய துறையில் டைரக்டராக இருக்கக் கூடியவர் விவசாயத் துறையிலே அனுபவமுள்ள விவசாயத் துறை பட்டதாரியாக இருந்தால், நிர்வாகம் சிக்கல் இல்லாமல் சுமுகமாக நடை பெற முடியும். அந்த நிலையிலே விவசாயத் துறை டைரக்டர் பதவிக்கு ஒரு பட்டதாரியை நியமிக்கும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விவசாயப் பட்ட தாரிகள் இந்தப் பதவிக்கு லாயக்கு உள்ளவர்களாக இருந்தால் அவர்களை இந்தப் பதவிக்கு நியமிப்பதும் கருதப்படும். ஆனால் இப்பொழுது மற்ற நிபுணர்களெல்லாம் விவசாய பட்டதாரிகளாக இருக்கிறார்கள். ஒரு ஐ.ஏ.எஸ். ஆபீஸர் டைரக்டராக இருப்பதால் ஒன்றும் சிக்கல் இல்லை.

*Indo-American Technical Assistance Programme*

* 520 Q.—SRI V. S. MANICKASUNDARAM (on behalf of Sri P. G. Manickam) : Will the Hon. the Minister for Home be pleased to state the names of the agricultural leaders selected for touring the United States of America in 1958 under Indo-American Technical Assistance Programme?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The selection is made by the Government of India who have not yet announced the names of those selected by them.

SRI A. V. P. ASAITHAMBI : மத்திய சர்க்கார் இன்னும் இதற்கான பெயர்களை அறிவிக்கவில்லை என்று அமைச்சர் அவர்கள் சொல்லுகின்ற காரணத்தினாலே, இந்தக் குடியானத் தலைவர்களோடு சர்வ கட்சி பிரதிநிதிகளையும் அனுப்பி வைத்தால் இந்தத் தொழில் நுட்பத்தை நன்கு கற்க வசதியாக இருக்கும் அல்லவா ? அதற்கான சிபார்சுகளை சர்க்கார் செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதிலே கட்சி விஷயம் ஒன்றுமில்லை. இருநூறுக்கு மேற்பட்டவர்கள் இதற்காக மனு போட்டார்கள். இதில் ஒன்பது பேர்கள் கொண்ட ஒரு "பானலை" மத்திய சர்க்காருக்கு அனுப்பியிருக்கிறோம். அதையும் வைத்துக் கொண்டு வேறு எதாவது அவர்களிடம் மனுக்கள் இருந்தால் அவைகளையும் பரிசீலனை செய்து அவர்கள் முடிவு செய்யவேண்டும்.